POST WITHOUT PRE-PAYMENT LICENCE NO. G 6 TN-MS C. P. P. 53 | ANNA Leading Progressive Tamil Daily of the People

# இதயதெய்வத்தின் எழுச்சி நாதம் !

Regd. No. TN-MS (C) 422 Phone : 420212 6 பக்கம் விலை 60 காசு

அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

மலர் 9] சென்னை 16-9-1985 திங்கள் வெளியீடு 17-9-1985 செவ்வாய் [இதழ் 324



மதுரையில் அண்ணா சிலைக்கு முதல்வா புரட்சித்தலைவர் மாலை அணிவித்தபோது எடுத்த படம். அமைச்சர்கள் ஆர். எம் வீ, காளிமுத்து, வாரியத் தலைவர்கள் கோடம்பாக்கம் குமார், மதுரை எஸ் பாண்டியன் ஆகியோர் உடன் இருக்கிறார்கள்.

## "என் ரத்தத்தின் ரத்தமான உடன்பிறப்புக்களே" என்ற புரட்சித்தலைவர் குரல் கேட்டு தென்பாண்டி மக்கள் பேரானந்தம்

திண்டுக்கல், செப். 16- தமிழ்ப் பெருங்குடி மக்களின் வாழ்த்துக்களாலும், பிரார்த்தனையாலும் முப்பிறவி கண்ட, முத்தமிழ்க் குலத்தின் தளநாயகன். இதயவேந்தன் புரட்சித் தலைவர், பேரறிஞர் அண்ணா வின் திருப்பெயரில் மாவட்டம் அமைத்து அங்கு திரண்டிருந்த லட்சோபலட்சம் மக்கள் மத்தியில் பேசினார்- "என் ரத்தத்தின் ரத்தமான உடன்பிறப்புக்களே" என்று புரட்சித் தலைவர் கூறியதைக் கேட்டு லட்சோப லட்சம் மக்கள் மகிழ்ச்சியால் இடிமுழக்கம் போல் கையொலி எழுப்பினர்,

அண்ணா மாவட்ட துவசக விழாவில், முதல்வர் புரட்சித்தலைவா நன்றி உரையாற்றி. லட்சோப லட்சம் மக்களையும், கழகத தொண்டர்களையும், கழகத் தலைவாகளையும் மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்தினாா

புரட்சிததலைவரின் பாசமிகு அன்புக் குரலை கேட்ட லட்சக்கணக்கான மக்களும், ஆர்ப்பரித்து, ஆரவாரம் செய்து தங்கள் மகிழ்ச்சியை வெளிபடுத்தனா

அண்ணா மாவட்ட துவக்கவிழாநிகழ்ச்சிகள் கிடடத்தட்ட முடிவடைந்து, நன்றியுரையாற்ற மாவட்ட ஆட்சித தலைவா மாதவன் நம்பியாா மைக் அருகேவந்து விட்டார்

ஆனால், அப்போது புரட்சித்தலைவர் பக்கத்திலிருந்த நாவலரிடம தான் பேசப் போவதாக கூறினாா. உடனே நாவலர் மைக் முன் வந்து புரட்சிததலைவா இப்போது நன்றி உரையாற்றுவாா எனக் கூறினார்.

இந்த அறிவிப்பை கேட்டது தான் தாமதம் விழாவுக்கு வந்திருந்த பத்து லட்சம் மக்களும உற்சாகமாக கைதட்டி புரட்சித்தலைவர் வாழ்க என்று கோஷம் எழுப்பிய போது, அந்த கோஷமும். கரவொலியும் திண்டுக்கல்லை சுற்றியுள்ள மலைகளில் மோதி, விண்ணை எட்டியது. திண்டுக்கல் மலைக் கோட்டையே அதிரும வகையில் கரவொலி இருந்தது.

புரட்சித தலைவர் கம்பீரமாக மைக் முன் வந்தாா எப்போதும் மைக்கை பிடிக்கும்பாணியில் பிடித்து பேசத் துவங்கினாா.

கடல்மடை திறந்த வெள்ளமபோல பொங்கி வரும் புனல் போல அவரது உரை வெண்கல நாதம போல ஒலித்தது

"என்னை வாழ வைக்கும் தெய்வங்களான தாய்மார்களே. அண்ணா வழியில் என்னை வழி நடத்திச் செல்லும் பெரியோர்களே என் ரத்தத்தின் ரத்தமான உடன்பிறப்புகளே நன்றி வணக்கம்."

என்று கூறி புரட்சித் தலைவர் அமர்ந்தாா.

மீண்டும் கையொலியும் முழக்கமும அதிர்ந்தது.

புரட்சித தலைவரின் அருகிலிருந்த அவரது துணைவியாா ஜானகி அம்மையார் உணர்சசி மேலிட்டு ஆனந்தக் கண்ணீர் வடித்தாா். அதைத் துடைத்துக் கொண்டார்,

கூட்டத்திலிருந்த லட்சக்கணக்கானவர்களும் புரட்சித தலைவரது உரையைக் கேட்டு உணர்ச்சி மேலிட்டு ஆனந்தக் கண்ணீர் சொரிந்தனர்.

## புரட்சித்தலைவர் நடத்தி வைத்த கழக தோழர் திருமணம்

மதுரை, செப். 16— திருச்சி மாவட்டம் திருமானூர் ஒன்றியசெயலாளர் பாளை திருநாவுக்கரசுக்கும் ராமபிருதாவுக்கும் இன்று காலை 10 மணி அளவில் முதல்வர் புரட்சித்தலைவர் திருமணத்தை நடத்திவைத்தார்.

இந்தத்திருமணம் மதுரை தமிழ்நாடு ஓட்டலிலுள்ள ஆடிட்டோரியத்தில் நடைபெற்றது. முதல்வர்புரட்சித் தலைவர் மங்கல நாணை எடுத்து தந்து இந்த மண விழாவை நடத்தி வைத்தார்.

மணவிழாவில் நிதியமைச்சர் டாக்டர் நாவலர் கழகப் பொதுச்செயலாளர் இராகவானந்தம் மதுரை நகர் மாவட்ட செயலாளர் பாண்டியன் உள்ளிட்ட பலர் பங்கேற்று மணமக்களை வாழ்த்தனர்.

## நெல்லுக்கு ஆறுதல் விலை விரைவில் அறிவிப்பு

புதுடெல்லி, செப். 16— இந்த ஆண்டு குறுவை நெல்லுக்கான ஆறுதல் விலை பற்றிய விவரங்களைமத்திய அரசு இன்னும் இரண்டொரு நாட்களில் அறிவிக்க இருக்கிறது.

பிரோஸ்பூரில் நடைபெற்ற ஒரு நிகழ்ச்சியில் கலந்து கொண்டு பேசிய மத்திய விவசாயத்துறை அமைச்சர் பூட்டாசிங்இதை தெரிவித்தார்.

வேளாண்மை உற்பத்திப் பொருள் விலை நிர்ணய கமிஷன் விரைவில் திருத்தி அமைக்கப்படும்என்றும் பூட்டாசிங் கூறினார்



## தந்தை பெரியார் பிறந்ததின விழா: பொதுச்செயலர் வேண்டுகோள்

பகுத்தறிவுப் பகலவன் தந்தைபெரியாரின் பிறந்ததினமான நாளை (17-9-85 அன்று) ஆங்காங்கே உள்ள தந்தை பெரியார் அவர்களின் திருஉருவச் சிலைக்கு கழக- மன்ற மற்றும் பிற அணிகளைச் சேர்ந்த தோழர்கள் மாலை அணிவித்து மரியாதை செலுத்தும்படி கேட்டுக்கொள்கிறேன்.

எஸ். இராகவானந்தம்

சென்னை-14
16-9-85

பொதுச்செயலாளர்,
அனைத்திந்திய அண்ணாதி,மு.கழகம்

## அண்ணா கொள்கை நிறைவேற்றும் புரட்சித் தலைவர்

தமிழக முதலமைச்சராக விளங்கும் மாண்புமிகு பொன்மனச செம்மல் டாக்டர் எம். ஜி ராமசசந்திரன் அவர்கள் அறிஞர் அண்ணா விருதினை முதன்முதலாகப் பெறுகின்ற பெருந்தகையாளராக திகழ்கிறார்

பேரறிஞர் அண்ணா அவர்கள் தமிழ்ப பண்பாட்டோடு கூடிய பொலிவும், வலிவும வாய்ந்த புதிய தமிழகததை உருவாககி காட்டியவா. அரசியல, பொருளியியல் சமூகவியல், ஆட்சியியல், கலையியல், இலககியவியல், வரலாற்றியல் போனற பலவேறு துறைகளிலும தமிழகத்தின் பண்பாட்டு மரபையும், மாட்சியையும் நிலைநாட்டி தமிழ் பெருங்குடிமக்களுக்கு உணாசசியும எழுச்சியையும ஊட்டிய ஒரு பெருமதலைவர் ஆவார்

அண்ணா நினைவின் அடையாளமாக அறிஞர் அண்ணா விருது எனனும புகழ் விருது தமிழக அரசால வழங்கபபெறுகிறது

அறிஞா அண்ணாவின கொள்கை, குறிக்கோள், கோட்பாடுகளின் நெறிநிறபவா அவற்றை நிலை நிறுததுபவா பரபபுகினறவா, ஆய்வு செய்யும ஆய்வாளர் எனனும் நான்கு வகையிலும் தகுதி பெறுவோரே இந்த விருதினைபபெறுவதற்கு உரியவராவர்

அறிஞர் அண்ணாவின கொள்கைகளின் முழு வடிவமாக நெறி நினறல், நிலை நிறுத்துதல், பரபபுதல், ஆய்தல் என்ற பணிகளை முழுமையாக, விழுமிய முறையில் நிறைவேறறி வரும் மாணபுமிகு டாக்டர் எம.ஜி. ராமச்சந்திரன் அவர்களுககு இந்த ஒப்பற்ற விருதினை தமிழக அரசு பெருமையோடும பெருமிதத்தோடும வழஙகி பெருமகிழ்வு கொளகிறது.

இரா. நெடுஞ்செழியன்
நிதி அமைச்சா

செ அரங்கநாயகம்
கல்வி அமைச்சர்

## புரட்சித்தலைவர் பங்கேற்ற சத்துணவு பணியாளர் மாநாடு

திண்டுக்கல், செப் 16— திண்டுக்கல்லில் நடைபெற்ற சத்துணவு பணியாளர் மாநாட்டில் முதல்வர் புரட்சித் தலைவர் பங்கேற்றார்.

சத்துணவு பணியாளர் மாநில மாநாடு திண்டுக்கல்லில் நடைபெற்றது. இநத மாநாட்டில் ஆயிரக்கணக்கான சத்துணவு பெண் பணியார்ளகளும், ஊழியர்களும் பங்கேற்றனர்.

### கோரிக்கை மனுக்கள

முதல்வர் புரட்சித் தலைவர் இந்த மாநாட்டில் பங்கேற்றார். புரட்சித் தலைவரிடம் சத்துணவு பணியாளாகள் சார்பில் ஊதிய உயர்வு உள்ளிட்ட கோரிக்கை மனுக்கள் வழஙகப்பட்டன.

இந்த மாநாட்டில் மேலவைக் கொறடா ஜப்பாா, சிஅண்ட டி பிரிவு என். ஜி. ஓ. சங்க தலைவர் லட்சுமி நரசிம்மன், நாடாளுமன்ற உறுப்பினர் செல்வேந்தரன், சட்டமன்ற உறுப்பினர்கள் பாலுச்சாமி அனபழகன் மற்றும் மதுரை எஸ் பாண்டியன் உள்ளிட்ட பலர் பங்கேற்றனர்.

## பிரதமர் தேர்தல் பிரச்சாரம்

சண்டிகர் செப். 16— பஞ்சாப் மாநிலத்தேர்தலில் பிரதமர் ராஜீவ் 4 நாட்கள் பிரச்சாரம் செய்கிறார். தனது முதல் நாள் பிரச்சாரத்தை இன்று பிரதமர் துவக்கினார். இன்றுகாலை ரோப்ரில் நடைபெற்ற கூட்டத்திலும், அமிர்தசரஸ் மாவட்டத்திலுள்ள சாண்டியாலாகுருவிலும் பிரதமர் தேர்தல் பிரச்சாரத்தில் ஈடுபட்டார். பிரதமரின் பேச்சைக் கேட்க பல்லாயிரக் கணக்கில் மக்கள் திரண்டு வநதிருந்தனர். இன்று மாலை சங்ரூரில் நடைபெறும் தேர்தல் பிரச்சார கூட்டத்தில் பங்கேற்றுப்பேசுகிறார்,

நாளை இரண்டாவது கட்ட தேர்தல் பிரச்சாரத்தை வரும் புதன்கிழமை பிரதமர் துவக்குகிறார். குருதாஸ்பூர் மாவட்டத்திலுள்ள பதன்கோட், ஜலநதர் பகுதியிலும் பரிதாகோட் பகுதியிலுள்ள முக்கத்சாரிலும்பிரதமர் பிரச்சாரம்செய்கிறார்

மூன்றாவது கட்டமா வெள்ளிக்கிழமை டான்டா லூதியானா, நாதனா ஆகிய இடங்களில் நடைபெறும் கூட்டத்தில் பங்கேற்று பேசுகிறார்.

நவான் சாகர், நாபா, பசல்கா ஆகிய இடங்களில் நடைபெறும் கூட்டங்களிலும் பிரதமர் பேசுகிறார்.

இன்றைய "அண்ணா" 6 பக்கங்கள் விலை 60 காசு



ஊர்வலமல்ல! மாநாடு அல்ல!! மதுரையில் அண்ணா சிலைக்கு மாலை அணிவிக்க வந்த முதல்வர் புரட்சித் தலைவரை வாழ்த்த வந்த மக்கள் வெள்ளம்! வெள்ளம்போல் திரண்டு வந்த மக்கள் கூட்டத்தைக் கட்டுப்படுத்தும் முன் போலீசாருக்குப "போதும் போதும்" என்றாகிவிட்டது.

### அரவணைத்தல்

எதிரியென நாம் கருதுகிறவர்களை அரவணைத்துச் செல்லுதல் நலம் பயக்கும். முதற் பலன் எதிர்ப்பின் வேகம் குறையுமல்லவா?

—பேரறிஞர் அண்ணா

### கறார்

சொல்லும் பொருளிலும், எடுக்கும் முடிவிலும், செயல்படும் முறையிலும் ஒரு நெறியை வகுத்துக் கொள்ள வேண்டும். அதற்குப் பெயர்தான் கறார் என்பது.

— தந்தை பெரியார்

# அண்ணா மாவட்ட துவக்க விழாச் சிறப்பு

திண்டுக்கல், செப். 16- அண்ணா மாவட்ட துவக்க விழா நேற்று திண்டுக்கல்லில் பல லட்சக்கணக்கான மக்கள் முன்னிலையில் நடைபெற்றது.

புதிய அண்ணா மாவட்டத்தை முதல்வர் புரட்சித் தலைவர் துவக்கி வைத்தார். அப்போது 10 திட்டங்களையும் மக்கள் நல்வாழ்வுக்காக அவர் தொடங்கி வைத்தார். விழாவுக்கு டாக்டர் நாவலர் தலைமை வகித்தார். அண்ணாவின் திருவுருவப் படத்தை நாவலர் திறந்து வைத்தார்.

அண்ணா மாவட்டத்தை துவக்கி வைத்த புரட்சித் தலைவர் திண்டுக்கல் நகருக்கு 9 கோடி ரூபாய் செலவில் அமைய இருக்கும் குடிநீர் திட்டத்துக்கு அடிக்கல் நாட்டினார். வடசந்தூர் — கீரனூர் குடிநீர் திட்டத்தை துவக்கி வைத்தார்.

வீட்டு வசதி திட்டங்களையும் துவக்கி வைத்தார். 32 வழித்தடங்களில் 32 பேருந்துகளை துவக்கி வைத்தார்.

### மங்கம்மா காலனி

புதிதாக கட்ட இருக்கும் குடியிருப்பு பகுதிக்கு ராணிமங்கம்மா காலனி என்று பெயரிட்டார். 57 லட்சம் குழந்தைகளுக்கு இலவச சீருடை திட்டத்தையும் துவக்கி வைத்தார். அண்ணா மாவட்டம் துவங்க அயராது உழைத்த அதிகாரிகட்கு நினைவு பரிசுகளையும் புரட்சித்தலைவர் வழங்கினார்.

தலைமைச் செயலாளர் அந்தோணி, வருவாய்த்துறை ஆணையாளர் அரிபாஸ்கர், மதுரை மாவட்ட ஆட்சித்தலைவர் வரதராஜுலு, அண்ணா மாவட்ட ஆட்சித்தலைவர் மாதவன் நம்பியார், செய்தி மக்கள் தொடர்பு இயக்குனர் கஸ்தூரிசுந்தர பாண்டியன் மற்றும் அதிகாரிகளுக்கு நினைவுப் பரிசை வழங்கினார்.

### நினைவுப் பரிசு

அண்ணா விருது பெற்ற முதல்வருக்கு அண்ணா மாவட்ட ஆட்சித்தலைவர் நினைவுப்பரிசு வழங்கினார். குடிநீர் வடிகால் வாரிய சார்பில் கும்பசந்த் சிதா உபதேச பேழையை நினைவு பரிசாக வழங்கினார். திண்டுக்கல் எம்பி நடராசன் சட்டமன்ற உறுப்பினர் பிரேம் குமார் மற்றும் ஏராளமானோர் மாலை அணிவித்தனர்.

விழா துவக்கத்தில் தலைமை செயலாளர் அந்தோணி வரவேற்புரை நிகழ்த்தினார்.

மேலவைத் தலைவர் ம.பொ.சி. நாடாளுமன்ற துணைத் தலைவர் தம்பித்துரை மேலவை துணைத் தலைவர் ஜி.சுவாமிநாதன், கழகப் பொதுச் செயலாளர் இராகவானந்தம் தமிழ் நாடு காங்கிரஸ் தலைவர் பழனியாண்டி, அமைச்சர் பண்ருட்டியார், கே.ஏ.கே. ஆகியோர் பேசினர்.

# அமைச்சர் நிகழ்ச்சிகள்

### ஆர்.எம்.வீ.

செப் 17 பகல் 12-30 மணி மதுரை மாலை திருப்பத்தூர் 18. காலை வந்தவாசி

### திருநாவுக்கரசு

செப். 17- ஆண்டிப்பட்டி
செப். 18- ராமக்குடி.

### —ரா. கோவிந்தராசன் நிகழ்ச்சிகள்

செப். 8. சேலம் 20 காலை 10 மணி முத்துப்பட்டை மாலை 5-00 மணி திருத்துறைப் பூண்டி.

# புரட்சித்தலைவர் லெனின் விருது பெறும் காலம் வரும்

## சிலம்புச் செல்வர் ம. பொ. சி.

திண்டுக்கல் செப். 16— புரட்சித்தலைவர் லெனின் விருது பெறும் காலம் வரும் என்று சிலம்புச் செல்வர் ம. பொ. சி. குறிப்பிட்டார்.

மேலவைத் தலைவர் ம. பொ. சி. பேசுகையில் கூறியதாவது:—

திராவிட நாடு கொள்கையை அண்ணா கைவிட்டு, அதிக அதிகாரம் வேண்டுமென்ற கோரிக்கைகளை எழுப்பினார்.

அப்படி பெறும் அதிகாரம் பரவலாக்கப்பட, புதிய மாவட்டங்களை புரட்சித் தலைவர் அமைத்து வருகிறார்.

கல்வித்துறையில் அதிகாரத்தையும் பரவலாக்கி வருகிறார். பல்கலைக் கழகங்களையும் பரவலாக்கி வருகிறார்.

உயர்நீதிமன்றத்தின் ஒரு பிரிவு மதுரையில் இருக்க வேண்டுமென்று வற்புறுத்தி வருகிறார். சுப்ரீம் கோர்ட்டின் ஒரு பிரிவு தென்னகத்தில் இருக்க வேண்டுமென்று கோரி வருகிறார். இதை விட அண்ணாவின் கொள்கைகளை நிறைவேற்ற வேறுயாராலும் முடியாது.

தென்னக முதலமைச்சர்கள் கூட்டம் பெங்களூரில் நடந்தது. அதற்கும் போனார். அதற்கு பிறகு காஷ்மீரில் எதிர்க்கட்சி முதலமைச்சர்கள் கூட்டம் நடந்த போது, அகாலிகட்சி போன்ற பிரிவினை கட்சிகளை அழைத்திருப்பதால் தான் வர முடியாது என்று துணிந்து சொன்னார். அவர் முதல்வர் மட்டுமல்ல உலகராஜதந்திரிகளில் தலைசிறந்த ராஜதந்திரி.

### அண்ணா நாமம்

அவர் பேசி முடிக்கும் போது அண்ணாவை மறப்பதில்லை. அண்ணா நாமம் வாழ்க என்று முழக்கமிட்டுதான் பேச்சை முடிப்பார்.

நான் மறக்கினும் நா மறக்காது நமச்சிவாயத்தை என்று அப்பர் சுவாமிகள் சொல்லி இருக்கிறார்.

அதுபோல அண்ணாவின் நாமத்தை அவர் மறப்பதில்லை. அது அவரது ஊனோடு, உயிரோடு, நாடி நரம்புகளில் கலந்திருக்கிறது.

புரட்சித்தலைவர் உடல் நலம் குன்றி இருந்தபோது இந்திரா காந்தி ஓடோடி வந்தார். நீங்கள் பிழைக்க வேண்டுமென்று தேசமே பிரார்த்திக்கிறது என்றார்.

அந்த அம்மையாருடைய பிரார்த்தனையும் மக்களது பிரார்த்தனையும் புரட்சித் தலைவரை வாழ வைத்துள்ளது.

மத்திய - மாநில உறவு எப்படி இருக்க வேண்டும் என்பதற்கு தமிழக அரசு இந்தியாவுக்கே வழிகாட்டியாக இருக்கிறது. கிடைக்கும் விருதை எல்லாம் பெறுபவர் புரட்சித் தலைவரல்ல. மத்திய அரசு அவருக்கு பத்மஸ்ரீ பட்டம் தர முன் வந்தபோது, அண்ணாவிடம் சென்று கேட்டார். அண்ணா வேண்டாமென்று சொன்னதும் அதை ஏற்க மறுத்துவிட்டார்.

இங்கே லெனின் விருது போல, அண்ணா விருது வழங்கப்படுகிறது. மாஸ்கோவிலேயே புரட்சித்தலைவரை அழைத்து லெனின் விருது வழங்கும் காலமும் வரும். அண்ணாவின் நூற்றாண்டு விழாவை எம்.ஜி.ஆர். கொண்டாட வேண்டும்.

இவ்வாறு மேலவைத் தலைவர் ம. பொ. சி. பேசினார்.

# தமிழர் சுட்டுக்கொலை: திரிகோணமலை சுடுகாடு போல் ஆனது

திரிகோணமலை, செப். 16— இலங்கைத் தமிழர்களை ராணுவம் பட்டப்பகலில் சுட்டுக் கொல்கிறது. திரிகோணமலையில் எங்கு பார்த்தாலும் தமிழர்களின் பிணம். அந்தப்பகுதியே ஒரு சுடுகாடு போல் காட்சி அளிக்கிறது.

இலங்கையில் ராணுவத்தினரும், சிங்கள வெறியர்களும் தமிழர்களை கொன்று குவிக்கிறார்கள் தமிழர் பகுதியில் ராணுவத்தினர் பயங்கர குண்டுகளை வீசி, விமான மூலமும் தாக்கி வருகிறார்கள்.

தமிழர்கள் பட்டப்பகலில் சுட்டுக் கொல்லப்படுகிறார்கள். சிங்கள ராணுவத்தினர் தமிழர்களை இழுத்துச் சென்று வெட்டியும், துப்பாக்கியால் சுட்டும் கொல்லுகிறார்கள்.

திரிகோணமலை சுடுகாடு போல் காட்சி அளிக்கிறது. எங்கு பார்த்தாலும் பிணக்குவியல் வீடுகள் எரிந்து கொண்டு இருக்கின்றன. இந்தப் பகுதிகளில் சுமார் 50 ஓட்டல்கள் இருந்தன அவை அனைத்தும் இடித்து தரை மட்டமாகிவிட்டது.

இலங்கைத் தமிழ் மக்கள் ஆண்களும் பெண்களும் காடுகளுக்கு இழுத்துச் சென்று கொல்லப்படுகிறார்கள்

திருகோணமலை முழுவதும் புகை மண்டலம் கப்பி கிடக்கிறது.

ராணுவத்தினர், சிங்கள வெறியர்கள் நாதன ஆயுதங்களுடன் தமிழர் பகுதியில் காக்குதல் நடத்தி வருகிறார்கள். ஹெலிகாப்டரில் இருந்து குண்டுகள் வீசப்படுகின்றன.

இந்தத் தாக்குதலை எதிர்த்து சில தமிழ் ஈழ விடுதலைப் போராளிகளும் போராடுகிறார்கள்

### ஊனமுற்றோர் மறுவாழ்வு பயிற்சி

வேலூர், செப். 16— தென் ஆற்காடு, வட ஆற்காடு மற்றும் தர்மபுரி மாவட்டங்களில் சமூக நல துறையின் கீழ் புதிதாக துவக்கப்பட்டுள்ள உடல் ஊனமுற்றோர் மண்டல மறுவாழ்வு நிலையம் வேலூரில் வரும் நவம்பர் 1ந்தேதி முதல் துவக்கப்படும், இந்த பயிற்சி முகாமில் உடல் ஊனமுற்ற ஆண், பெண் இருபிரிவினரும் சேரலாம் என்று வட ஆற்காடு மாவட்ட ஆட்சித் தலைவர் தெரிவித்துள்ளார்.

உடுப்பணியா பட்டாளமா ஊர்வலத்திலே வந்திடுவீர்

என்னாங்க இது காட்டுமிராண்டி மாதிரி ஊர்வலத்திலே நடந்துக்க ஹூங்கிறீங்களா?

# தி.மு.க. குண்டர்கள் ரவுடித்தனம்: இரும்பு வேலிகளை நொறுக்கினர்

சென்னை, செப் 16— தி. மு. க. ஊர்வலத்தினர் நேற்று சென்னை அண்ணா சாலை மற்றும் பல்வேறு சாலைகளில் ரவுடித்தனத்தில் ஈடுபட்டனர், பல லட்சம் ரூபாய் செலவில் பொருத்தப்பட்ட இரும்பு தடுப்பு சுவர்களை, தி. மு. க. காலிகள் உடைத்தெறிந்தனர், போக்குவரத்துக்கும் அவர்கள் இடைஞ்சல் விளைவித்தனர்.

சென்னை மற்றும் பல்வேறு இடங்களில் நேற்று தி. மு. க.வினர் வன்முறை சம்பவங்களில் ஈடுபட்டனர்.

ஊர்வலத்தில் உடுப்பணியா பட்டாளமாகக் கலந்து கொள்ள வேண்டும் என்று கருணாநிதி தன்னுடைய கட்சியினருக்கு மறைமுகமாக உத்தரவிட்டிருந்தார் அதை மெய்ப்பிக்கும் வகையில் அவரது கட்சியினர் நேற்று காலித்தனம் செய்தனர்.

ஊர்வலத்தில் கலந்து கொள்பவர்கள் அமைதியுடன் நடந்துகொண்டு போக்குவரத்துக்கு தடங்கல் இல்லாமல் இருக்க வேண்டும் என்றுதான் கட்சித் தலைவர்கள் அவர்களது கட்சியினருக்குச் சொல்லி வைப்பார்கள்.

தி. மு. க ஊர்வலத்தில் வந்த குண்டர்கள் சென்னையில் வெறியாட்டம் ஆடினர்கள் சாலை ஓர கடைகளில் புகுந்து அவர்கள் இஷ்டம் போல் சூறை ஆடினா.

பஸ்கள், கார்கள் மற்றும் இதர வாகனங்கள் சாலைகளில் செல்ல ஊர்வலத்தினர் அனுமதிக்கவில்லை. லாரிகளில் அவர்கள் ஏறிக்கொண்டு தாறுமாறாக சாலைகளில் ஓட்டினார்கள் இதனால் போக்கு வரத்து பெரிதும் பாதிக்கப்பட்டது, சென்னை நகர மக்கள் தி.மு.க. குண்டர்களால் வேதனை அனுபவிக்கும் நிலை ஏற்பட்டது.

தியாகராயநகர் மற்றும் சென்னை அண்ணாசாலையில் திமுக. பேர்வழிகள் காலித்தனம் செய்தனர், வாகன போக்குவரத்தும் மக்கள் நடமாட்டமும் முறையாக நடப்பதற்கு சென்னை போக்கு வரத்துப் போலீசார் சென்னையில் பல்வேறு சாலைகளில் இரும்பாலான தடுப்புச்சுவர்களை பொருத்தியிருக்கின்றனர்.

இந்த இரும்பு தடுப்புச் சுவர்களை திமுக காலிகள் நேற்று தகர்த்தெறிந்தனர். லாரிகளில் இருந்து கீழே குதித்த ஊர்வலத்தினர் பல இடங்களில் இந்த தடுப்புச் சுவர்களை உடைத்து எறிந்தனர்.

அப்படி உடைத்து எறிந்த தடுப்பு சுவர்களையும் அவர்கள் சாலையின் மத்தியில் தூக்கிப் போட்டதால் அந்த வழியே வந்த பேருந்துகளும் இதர வாகனங்களும் பாதிக்கப்பட்டன.

குறிப்பாக ஸ்பென்சர் கம்பெனி மற்றும் அண்ணாசாலை தலைமை தபால் ஆபீஸ் அருகே சுமார் 45 மீட்டர் நீளம் உள்ள, இரும்பு தடுப்புச் சுவர் பிய்த்து எறியப்பட்டு நாசமாயின,

ஏராளமான பொருட் செலவில் இந்த இரும்புச் சுவர்கள், வெல்டிங் வேலைப்பாட்டுடன் செய்யப்பட்டவை,

போக்குவரத்தை எளிதில் சமாளிக்க, சென்னை போலீசார் மாநகராட்சி மற்றும் தனியார் நிறுவனங்கள் மூலம் இந்த இரும்பு சுவர்களை ஏற்படுத்தினர். பொது மக்கள் அடிக்கடி சாலையின் குறுக்கே நடந்து விபத்துக்குள்ளாகாமல் இருக்கவும் இந்த சுவர்கள் அவர்களுக்கு பாதுகாப்பாக இருக்கின்றன. நேற்று தி.மு.க.வின் காலித்தனத்தால் சென்னையில் பல பகுதிகளில் இந்த தடுப்புச் சுவர்கள் நாசமாயின.

சில இடங்களில் போலீசார் இதைத் தடுத்த போது, திமுக.வினர் போலீசை தள்ளி விட்டுச் சென்றனர்.

இரும்புத் தடுப்புச் சுவர்களை உடைத்து எறிந்த தி. மு. க. வினரை எங்களால் ஒன்றும் செய்ய முடியவில்லை. நாங்கள் ஆங்காங்கே இரண்டொருவர்தான் இருந்தோம். எங்களால் என்ன செய்ய முடியும் என்று சில போலீசார் கூறினர்.

செல்வி ஜெயலலிதாவை விவசாய உயர்மட்டக் குழுத்தலைவர் முனு ஆதி சந்தித்து வாழ்த்து தெரிவித்தபோது எடுத்தபடம்.

# அண்ணா மாவட்ட அருமை பெருமைகள்

திண்டுக்கல், செப். 16- திண்டுக்கல்லைத் தலைநகராகக் கொண்டு அமைக்கப்பட்டுள்ள அண்ணா மாவட்டத்தின் சிறப்புக்கள் வருமாறு:— திண்டுக்கல்லை தலைநகராகக் கொண்ட அண்ணா மாவட்டத்தின் பரப்பளவு 5,832.61 சதுர கி.மீ. மக்கள் தொகை 15,64,448.

### 3 டிவிஷன்கள்

அண்ணா மாவட்டத்தில் திண்டுக்கல் பழனி கொடைக்கானல் ஆகிய 3 வருவாய் கோட்டங்கள் (ரெவின்யூ டிவிஷன்) உள்ளன. இந்த மாவட்டத்தில் திண்டுக்கல், நத்தம், நிலக்கோட்டை, பழனி வேடசந்தூர் கொடைக்கானல் ஆகிய 6 தாலுகாக்கள் அடங்கும்.

### 361 கிராமங்கள்

அண்ணா மாவட்டத்தில் மொத்தம் 361 கிராமங்கள் உள்ளன.

நத்தம் தாலுகாவில் 2 கிராமங்களும் திண்டுக்கல் தாலுகாவில் 93 கிராமங்களும், பழனி தாலுகாவில் 117 கிராமங்களும், வேடசந்தூர் தாலுகாவில் 63 கிராமங்களும், கொடைக்கானல் தாலுகாவில் 6 கிராமங்களும், நிலக்கோட்டை தாலுகாவில் 26 கிராமங்களும் இருக்கின்றன.

அண்ணா மாவட்டத்தில் மொத்தம் 14 பஞ்சாயத்து யூனியன்கள் உள்ளன.

அனைத்து அலுவலகங்களும் ஒரே இடத்தில் அமையும் வண்ணம் மாதிரி நகராக இது அமையும்.

திருச்சி ரோட்டில் உள்ள சீலப்பாடி கிராமத்தில் ஆயுதப்படை பிரிவு காவலர் குடி இருப்பு மைதானத்திற்காக 30 ஏக்கர் நிலம் ஆர்ஜிதம் செய்யப்பட்டு இருக்கிறது

இந்த மைதானத்தில் தான் அண்ணா மாவட்ட தொடக்க விழா நடைபெற்றது.

அண்ணா மாவட்டத்தின் போலீஸ் சூப்பிரண்டு அலுவலகம் திருச்சி ரோட்டில் உள்ள விவேகானந்தர் பகுதியில் அமைக்கப்பட்டு உள்ளது.

### சிறப்புகள்

புதிதாக தொடங்க இருக்கும் அண்ணா மாவட்டத்தில் இயற்கை எழில் கொஞ்சும் கொடைக்கானல் இணைந்துள்ளது.

இயற்கையான அழகை பொலிவுடன் பராமரிக்கும் பொருட்டும் கொடைக்கானல் நகரின் வளர்ச்சியை மேம்படுத்தும் பொருட்டும் அரசு இங்கு உதவி கலெக்டர் ஒருவரை நியமித்து இருக்கிறது.

### பழனி முருகன் கோவில்

அண்ணா மாவட்டம் கொண்டுள்ள மற்றொரு தனிப்பெரும் சிறப்பு பழனி முருகன் கோவிலை தன்னகத்தே கொண்டு இருப்பதும் ஆகும்.

### தொழில் வளம்

அண்ணா மாவட்டத்தின் முக்கிய தொழிலாக விவசாயம் இருந்து வருகிறது. மலைப் பிரதேசங்களை கொண்டுள்ள அண்ணா மாவட்டத்தில் திராட்சை, முந்திரி, காபி தேயிலை ஆகிய முக்கிய விளை பொருட்கள் பயிர் செய்யப்படுகிறது.

இது மட்டுமின்றி மரம் வியாபாரம், தோல் பதனிடுதல் நெசவு தொழில் ஆகியவையும் மாவட்டத்தில் தொழில் வளர்ச்சியில் முக்கிய பங்கு வகிக்கிறது.

### ராமநாதன்

அண்ணா மாவட்டத்தின் அமைப்பு பணிகளை வருவாய்த்துறை ஆணையாளர் ஹரிபாஸ்கர் தலைமையிலான குழு தீவிரமாக செயல்படுத்தி வருகிறது.

அண்ணா மாவட்டத்தின் கலெக்டராக மாதவன் நம்பியாரும் போலீஸ் சூப்பிரண்டாக ராமநாதனும் நியமிக்கப்பட்டு இருக்கிறார்கள்.



# வரதட்சணை தடுப்புச் சட்டம்: மாநில அரசுகளுக்கு மத்திய அரசு தாக்கீது

புதுடெல்லி, செப். 16- வரதட்சணை ஒழிப்பு திருத்தச் சட்டத்துக்கு மாநில அரசுகள் தீவிரமான முறையில் பிரச்சாரம் செய்து நல்ல ஒத்துழைப்பு தர வேண்டும் என்று மாநில அரசுகளுக்கு மத்திய அரசு தாக்கீது அனுப்பியிருக்கிறது.

வரதட்சணை தடுப்பு திருத்தச் சட்டம் (1985) காந்தி பிறந்த தினமான அக்டோபர் மாதம் 2ம் தேதி முதல் அமுலுக்கு வருகிறது. வரதட்சணை வாங்கினாலும் கொடுத்தாலும் இந்தச் சட்டப்படி குற்றம் ஆகும்.

இந்தச் சட்டப்படி குற்றவாளிகளுக்கு 6 மாதகடும் சிறைத்தண்டனை மற்றும் 10 ஆயிரம் ரூபாய் அபராதம் விதிக்கவும் வகை செய்யப்பட்டுள்ளது.

ஏற்கனவே அமலில் இருந்த வரதட்சணை தடுப்புச்சட்டப்படி குற்றவாளிகளுக்கு 5 ஆயிரம் ரூபாய்தான் அபராதம் விதிக்க முடியும்.

புதிய சட்டத்திருத்தப்படி தண்டனை உயர்த்தப்பட்டுள்ளது.

மக்களிடையே வேரூன்றிப்போன இந்தக் கொடிய வழக்கத்தை அறவே ஒழிக்கும் வகை செய்யும் இந்த சட்டத்திருத்தத்துக்கு பொதுமக்களிடையே தீவிர பிரச்சாரம் செய்ய வேண்டும் என்று மத்திய அரசு மாநில அரசுகளைக் கேட்டுக் கொண்டுள்ளது. திட்டமிட்டு நல்ல மறையில் பிரச்சாரம் செய்ய வேண்டும் என்றும் செயல்படுத்துவதில் மாநில அரசுகள் ஒத்துழைப்பு தர வேண்டும் என்றும் மத்திய சட்டத்துறை செயலாளர் ஆர். வீ. எஸ். பெரிசாஸ்திரி மாநில தலைமைச் செயலாளர்களுக்கு கடிதம் எழுதியுள்ளார்.

# படை திரண்டது - பார் அதிர்ந்தது
# அண்ணா மாவட்டமே ஆர்த்தெழுந்தது
# 15 லட்சம் பேர் அணிவகுப்பு

## அலங்கார மேடையிலிருந்து புரட்சித்தலைவர் பார்த்தார்

**திண்டுக்கல், செப். 16- திண்டுக்கல் நகரில் அண்ணா மாவட்ட துவக்க விழாவினை யொட்டி நடைபெற்ற ஊர்வலத்தில் 15 லட்சத்துக்கும் மேற்பட்டமக்கள் பங்கேற்றனர். இந்த ஊர்வலத்தை முதல்வர் புரட்சித் தலைவர் இரண்டு மணி நேரம் பார்வையிட்டார்.**

இந்த ஊர்வலம் பிற்பகல் 4 மணி அளவில் சோலையார்புரத்திலிருந்து புறப்பட்டது. ஊர்வலத்தை வருவாய் ஆணையாளர் அரிபாஸ்கர் துவக்கிவைத்தார்.

இந்த ஊர்வலத்தை பார்வையிட முதல்வர் புரட்சித் தலைவர் பிற்பகல் 4 மணிக்கு மதுரையிலிருந்து கார் மூலம் திண்டுக்கல் புறப்பட்டார்.

திண்டுக்கல்லில் புதிதாக அமைக்கப்பட்டிருக்கும் அண்ணா சிலை அருகே அமைக்கப்பட்ட மேடைக்கு முதல்வர் புரட்சித் தலைவர் 5.50 மணிக்கு வந்தார். முதல்வருடன் அவரது துணைவியார் ஜானகி அம்மையாரும், மேலவைக் கொறடா ஜேப்பியாரும் வந்தனர்.

நிதியமைச்சர் டாக்டர் நாவலர், அமைச்சர்கள் பண்ருட்டி ராமச்சந்திரன், அரங்கநாயகம், நல்லுசாமி, சவுந்தரராசன், அருணாசலம், மாவட்ட செயலாளர் முத்தையா நாடாளுமன்ற உறுப்பினர்கள் நடராஜன், காதர்ஷா, சட்டமன்ற உறுப்பினர்கள் பிரேம்குமார், குப்புசாமி, சலீம் நகரச் செயலாளர் சீனிவாசன் ஒன்றியச் செயலாளர்கள் குமாரசாமி பி.கே.சண்முகம் ஆகியோர் முதல்வர் புரட்சித் தலைவருக்கு மாலைகளும், சால்வைகளும் அணிவித்து வரவேற்றனர்.

ஊர்வலத்தைப் பார்வையிட முதல்வர் புரட்சித் தலைவர் 6 மணி அளவில் மேடையில் ஏறினார். ஊர்வலம் அந்த இடத்தை கடந்து செல்ல இரண்டு மணி நேரம் ஆனது. இரண்டு மணி நேரமும் முதல்வர் புரட்சித்தலைவர் மேடையில் நின்று இருவிரல்களைகாட்டியும், கையசைத்தும், கைகூப்பியும் மக்கள் அந்தமகத்தானவரவேற்பை ஏற்றார்.

திண்டுக்கல் நகரம் இது வரை எக் காலத்திலும் காணாத அளவு 15 லட்சத்திற்கும் மேற்பட்ட மக்கள் ஊர்வலத்தில் வந்தனர். ஊர்வலத்தில் குதிரைப் படை முதலில் அணிவகுத்து வர அதைத் தொடர்ந்து பொய்க்கால் குதிரை ஆட்டம் கரகாட்டம் மற்றும் தமிழ் கலைகளை பறைசாற்றும் நடனக்கலைஞர்கள் நடனமாடி வந்தனர்.

அரசின் சாதனைகளை விளக்கும் 32 அலங்கார டிரக்குகள் ஊர்வலத்தில் அணிவகுத்து வந்தன. அண்ணாவின் பேச்சும் ஒலிபரப்பப்பட்டது.

இந்த ஊர்வலத்தில் தேசிய மாணவர் படை மாணவர்கள் அணிவகுத்து வந்தனர். அவர்கள் முதல்வர் புரட்சித் தலைவருக்கு 'சல்யூட்' அடித்து மரியாதை செலுத்தினர். மாணவர்களின் மரியாதையை ஏற்கும் விதத்தில் புரட்சித்தலைவரும் சல்யூட் அடித்து, மாணவர்கள் தந்த மரியாதையை ஏற்றுக் கொண்டார்.

ஊர்வலத்தில் அரசு டிரக்குகளுடன் கழகத் தோழர்களும நூற்றுக்கணக்கான வேன் மற்றும்வாகனங்களில் வந்தனர். புரட்சித் தலைவர் வாழ்க, அண்ணா நாமம் வாழ்க என்று அவர்கள் எழுப்பிய கோஷம் விண்ணதிரச் செய்தது.

ஊர்வலத்தில் ஏராளமான தாய்மார்களும் வந்தனர். ஏழைகளின் ஏந்தல் எங்கள் அண்ணன் புரட்சித்தலைவர் 100 ஆண்டு வாழவேண்டும் என்று தாய்மார்கள் எழுப்பிய கோஷம் புல்லரிக்கச் செய்வதாய் இருந்தது.

தாய்மார்களும், கழகத் தோழர்களும் அளித்த அன்பு வரவேற்பை புரட்சித்தலைவர் பெற்றுக் கொண்டார்.

யார்சிறுத்ததோ, படை பெருத்ததோ என வியக்கும் வண்ணம் திண்டுக்கல்லில் நடைபெற்ற இந்த ஊர்வலம் 9மணி அளவில் விழா திடலை அடைந்தது.

புரட்சித்தலைவர் வருகையில் தமிழகமே திண்டுக்கல்லில் திரண்டதுபோ என வியக்கும் வண்ணம் திண்டுக்கல் நகரில் எங்கு பார்த்தாலும் மக்கள்வெள்ளமாகத் தான் இருந்தது.

### அண்ணாசிலை திறப்பு

திண்டுக்கல் மருத்துவமனை அருகே அமைக்கப்பட்டிருக்கும், அண்ணா சிலையை முதல்வர் புரட்சித் தலைவர் திறந்துவைத்தார். இந்த நிகழ்ச்சிக்கு மாவட்ட செயலாளர் மசட்பட்டி முத்தையா தலைமை வகிக்க, துணை சபாநாயகர் வி.பி. பாலசுப்பிரமணியம் முன்னிலைவகித்தார்.

இந்த நிகழ்ச்சியில் நிதி அமைச்சர் நாவலர், அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன், அரங்கநாயகம் உள்ளிட்ட பலர் பங்கேற்றனர் பல்லாயிரக்கணக்கான மக்களின் வாழ்த்து முழக்கங்களோடு, தமிழ் தாயின் மூத்த குடிமகன் பேரறிஞர் அண்ணாவின் சிலையை தமிழ்குலத் தலைவர் புரட்சித் தலைவர் திறந்து வைத்தார்.

### பொன்னேரி தொகுதியில் அண்ணா பிறந்த தினவிழா

பொன்னேரி, செப்.16- பொன்னேரி தொகுதியில் அண்ணா பிறந்த தினவிழா சிறப்பாகக் கொண்டாடப்பட்டது.

சட்டமன்றஉறுப்பினர் கே.பி.கே. சேகர் பொன்னேரி தொகுதி முழுவதும் சென்று கழக கொடியினை ஏற்றி வைத்தார். பின்னர் அண்ணா பிறந்த தினத்தை யொட்டி அனைவருக்கும் பொங்கல் வழங்கினார்.

சென்னையில் பெண் டாக்டர்கள் மாநாட்டை மத்திய அமைச்சர் மரகதம் சந்திரசேகர் தொடங்கிவைத்தார் அமைச்சர் டாக்டர் [illegible], மருத்துவக் கல்வி இயக்குநர் லலிதா காமேஸ்வரன் ஆகியோர் கலந்து கொண்டனர். விழாமலர் வெளியிட்ட போது எடுத்தபடம்

## அறிஞர் அண்ணா

செந்தமிழ் நாட்டினில் சிந்தனை சேர்த்திட
வந்தவர் அறிஞர் அண்ணா-அவர்
தந்தது அறிவுரை தமிழ்த் திருக்குறளுரை
தரணிக்கே திருமறையாம்.

மேடையில் நின்று முழங்கிடும் போதினில்
மேதினி செவி கொடுக்கும் - நீர்
ஓடையைப் போல உவமைகள் பெருகிட
உயர் இலக்கியம் கிடைக்கும்.

பார்வையில் பேரொளி; பகுத்தறிவுச் சுடர்,
பட்டி தொட்டி மணக்கும்
யார் எதிர்த்தாலும் இன் சொல்லே வழங்கி,
எல்லோரையும் இணைக்கும்.

ஏழையின் சிரிப்பினில் இறைவனைக் கண்டவர்
இயலிசை நாடகம் உயிரெனக் கொண்டவர்
அகத்தியர் உருவம்! அகத்தினில் இமயம்
அரும் பொருள் தொல் காப்பியம்

டாக்டர் சமரசம் எம்.எல்.ஏ.

சென்னை தேனாம்பேட்டையில் தீவிபத்தால் வீடு இழந்தவர்களுக்கு அமைச்சர் கே.ஏ.கே. இலவச உடை, அரிசி, நிதி வழங்கினார். குடிசைமாற்று வாரியத் தலைவர் என்.வி.என். செல்வம் உடன் இருக்கிறார்.

# அண்ணா மாவட்ட கட்டிடங்கள் கட்ட மேலும் ரூ4கோடி ஒதுக்கீடு

## நிதி அமைச்சர் டாக்டர் நாவலர் தகவல்

திண்டுக்கல், செப். 16- அண்ணா மாவட்ட அமைப்புக்கு இதுவரை 6 கோடி ரூபாய் செலவிடப்பட்டுள்ளது இன்னும் 4 கோடி ரூபாய் செலவிடப்படும் என்று நிதி அமைச்சர் டாக்டர் நாவலர் கூறினார்.

விழாவுக்கு தலைமை வகித்து டாக்டர் நாவலர் பேசியதாவது:-

செப்டம்பர் 15 பெருமைப் படுகிறது. அக்டோபர் 2 காந்தியின் பிறந்த நாளால் பெருமைப் படுகிறது செப்டம்பர் 17 தந்தை பெரியார் பிறந்த நாளால் பெருமைப்படுகிறது.

இன்று அண்ணா பிறந்த நாள் 'ஆடுவோமே பள்ளுப்பாடுவோமே' அண்ணா மாவட்டம் அமைந்து விட்டது என்று பள்ளுபாடுவோமே. என்று ஆடுவோம். யார் சிறுத்ததோ படை பெருத்ததோ என்ற அளவுக்கு இங்கே கூட்டம் உள்ளது. ஊர்வலத்திலும் அத்தகைய கூட்டம் இருந்தது.

எங்கும், எதிலும், என்றும் தமிழ் மொழி இருக்க வேண்டும் என்று அண்ணா விரும்பினார். அதற்காக இருமொழித் திட்டத்தைக் கொண்டு வந்தார். இந்தி கட்டாயபாடம் என்பதை நிறுத்தினார்.

### ஆங்கில ஆணை

தாய்மொழி தமிழ் ஆங்கிலம் செவிலி மொழி என்றார்.

என்.சி.சி. படையில் ஆங்கில ஆணைச் சொற்களுக்கு பதிலாக இந்தி ஆணைச் சொற்களை மத்திய அரசு புகுத்திய போது முதல்வராக இருந்த அண்ணா அதை எதிர்த்தார்.

அதனால் ஓராண்டுகாலம் என்.சி.சி படையே இல்லாமல் இருந்தது.

ஓராண்டு காலம் கழித்து ஆங்கில ஆணையை பயன்படுத்தலாமென்று மத்திய அரசு கூறியது.

சென்னை மாநிலத்திற்கு தமிழ்நாடு என்று பெயரை சூட்டிய பெருமை அண்ணாவுக்குச் சேரும் சுயமரியாதைத் திருமணங்களை சட்டபூர்வமாக ஆக்கினார். குறைந்த விலையில் அரிசி போட்டார். தமிழகத்தில் தான் 1 கிலோ இப்போது 1 ரூபாய் 75 பைசாவுக்கு விற்கப்படுகிறது.

### அரிசிக்கு ரூ 80 கோடி மானியம்

அதிக விளைச்சலுள்ள ஆந்திராவில் 2 ரூபாய் வங்கத்தில் 2.75 மராட்டியத்தில் 3 ரூபாய் 6 காசு இப்படி விற்கப்படுகிறது.

அரிசி மலிவுவிலையில் கொடுப்பதற்கு 80 கோடி ரூபாய் மானியம் கொடுக்கிறோம்.

இது 19வது மாவட்டமாக அமைகிறது. ஒரு மாவட்டம் அமைய 10 கோடி ரூபாய் செலவாகிறது 45 துறை அலுவலகங்கள் இங்கு வரவேண்டியுள்ளது.

இதுவரை 6 கோடி ரூபாய் செலவழித்திருக்கிறோம். இன்னும் இரண்டாண்டு காலத்தில் 4 கோடி ரூபாய் செலவிடப்படும்.

ஒரு வட்டத்தை பிரிப்பதற்கே 3 கோடி ரூபாய் தேவைப்படுகிறது: ஒரு நகரசபைக்கு குடிநீருக்காக 9 கோடி ரூபாய் இங்குதான் வழங்கப்பட்டிருக்கிறது.

சத்துணவு திட்டம் மூலம் 80 லட்சம் குழந்தைகளுக்கு உணவுபோடுகிறோம் முதியவர்களுக்கும் மற்றவர்களுக்கும் 3 லட்சம் பேருக்கு சத்துணவு அளிக்கப்படுகிறது. அவர்களுக்கு வேட்டி சேலையும் வழங்கப்படுகிறது.

1 முதல் 8 வகுப்பு வரை உள்ள குழந்தைகளுக்கு இலவச சீருடை, இலவச நோட்டு புத்தகம் வழங்க 16 கோடி ரூபாய் செலவிடப்படுகிறது 57 லட்சம் குழந்தைகள் இதனால் பயனடைகிறார்கள்.

அண்ணா மாவட்டத்தில் 1 லட்சத்து 96 ஆயிரத்து 231 குழந்தைகளுக்கு இதனால் நன்மை கிடைக்கிறது.

இங்கு [illegible] வழங்கப்படும் அண்ணா விருது, நாவலரை பவுன் சங்கிலியோடு அண்ணாவின் பதக்கமும் அளிக்கப்பட்டிருக்கிறது. 10 ஆயிரம்ரூபாயும்வழங்கப்படுகிறது.

அந்த விருதைப் பெற புரட்சித் தலைவரைத் தவிர வேறுயாருக்கும் தகுதி இல்லை. அதனால் தான் புரட்சித்தலைவரை தேர்ந்தெடுத்தோம்.

புரட்சித் தலைவரை பற்றி அண்ணா பல சமயங்களில் பேசியிருக்கிறார். எம்.ஜி.ஆரால் கழகத்தை துறக்க முடியாது. கழகம் அவரை இழந்துவிடும் என்பதை நினைத்துப்பார்க்க முடியாது என்று சொல்லியிருக்கிறார். (புரட்சித்தலைவர் பற்றி அண்ணா கூறிய பல கருத்துக்களை நாவலர் எடுத்துக் கூறினார்)

யாரும் பெறாத பரிசைப் புரட்சித் தலைவருக்கு வழங்குகிறோம். அண்ணாவே விரும்பிக்கொடுக்க நினைக்கும் பரிசாகும் இது.

சென்னை பல்கலைக் கழகம் தனது 125வது ஆண்டு விழாவில் புரட்சித்தலைவருக்கு டாக்டர் பட்டம் வழங்கியிருக்கிறது. அப்படிப் பட்டவருக்கு இந்த விருதை வழங்குகிறோம்.

அண்ணா மாவட்டம் என்று பெயர் வைத்ததை சிலர் எதிர்க்கிறார்கள். ரஷியாவிலுள்ள லெனின் கிராடு என்ற இடத்தில் லெனின் பிறக்கவில்லை.

இந்தஇடத்திற்குசெயின்ட் பீட்டர்ஸ்பர்க்என்று பெயர் இருந்தது. அதை மாற்றி லெனின்கிராடு என்று பெயர் வைத்தனர். காரணம் அங்கு தான் புரட்சி தோன்றியது.

கப்பல் படையினர் புரட்சியை துவக்கினார்கள் அந்தக் கப்பல் இன்னும் காட்சிக்காக வைக்கப்பட்டுள்ளது. அந்த இடத்திற்கு தான் லெனின் கிராடு என்று பெயர் வைத்தார்கள்.

காந்தி பிறந்தது போர்பந்தரில் ஆனால் அவருடைய பெயரும், சிலையும் இந்தியா முழுவதும் இருக்கின்றன. இதைப் போலத்தான அண்ணாவின் பெயரை சூட்டியிருக்கிறோம்

இவ்வாறு நிதி அமைச்சர் டாக்டர் நாவலர் கூறினார்.

# இலங்கைபடுகொலையை உடனே நிறுத்த இந்தியா தீவிர நடவடிக்கை

## போர் நிறுத்த ஒப்பந்தமும் நீடிப்பு

புதுடெல்லி செப். 16 இலங்கையில் நடக்கும் தமிழர் படுகொலை உடனே நிறுத்தப்பட வேண்டும்; போர் நிறுத்த ஒப்பந்தம் மேலும் 3 மாதங்களுக்கு நீட்டிக்கப்பட வேண்டும் என்று இந்தியா வலியுறுத்தி வருகிறது.

இலங்கையில் தமிழர்கள் தினந்தோறும் படுகொலை செய்யப்படுகிறார்கள். ராணுவத்தினரும், சிங்கள வெறியர்கள் மற்றும் ஊர்க்காவல் படையினர் தமிழர்களை சுட்டுக்கொல்லுகிறார்கள்.

இந்தப் படுகொலையை உடனே நிறுத்த வேண்டும் என்று இந்தியா எச்சரிக்கை விடுத்துள்ளது.

இலங்கை அரசுக்கும் தமிழ் ஈழ விடுதலை இயக்கத்தினருக்கும் 3வது சுற்று பேச்சு வார்த்தை நடைபெறவிருக்கும் நிலையில் போர் நிறுத்த ஒப்பந்தம் வரும் 18ம் தேதியுடன் காலாவதியாகிறது.

3வது சுற்று சமரசப் பேச்சு வார்த்தை தொடங்குவதற்கு முன்னால் இலங்கையில் போர்நிறுத்த ஒப்பந்தம் மேலும் 3மாத காலத்துக்கு நீட்டிக்கப்பட வேண்டும் என்றும் இந்தியா இலங்கைக்கு தெரிவித்துள்ளது.

திரிகோணமலையில் அன்றாடம் நடக்கும் படுகொலைக்கு முற்றுப்புள்ளி வைத்து, போர் நிறுத்த ஒப்பந்தத்தை இரு தரப்பினரும் கண்டிப்பாக அனுசரிக்கவேண்டும் என்பதிலும் இந்திய அரசு கவிரமாக இருக்கிறது.

புதுடெல்லி வந்துள்ள தமிழ் ஈழவிடுதலை இயக்கத்தினர் பிரதமர் ராஜீவை சந்தித்து தமிழர் பிரச்சினை குறித்து பேசவிருக்கிறார்கள்.

இந்தியா தயாரித்துள்ள புதிய திட்டம் குறித்து பிரதமர் ராஜீவும் விடுதலை இயக்கத்தினரும் ஆலோசனை நடத்துவார்கள் அமையவிருக்கும் வடக்கு கிழக்கு மாநிலங்களுக்கு அளிக்கப்பட வேண்டிய அதிகாரங்கள் குறித்தும் அவர்கள் பேசுவார்கள்.

ஜனாதிபதி ஜெயவர்த்தனே எத்தனை அளவு உத்தரவாதம் அளித்தாலும் தமிழர்களை கொன்று குவிக்கும் சிங்கள ராணுவத்தினரை அவரால் கட்டுப்படுத்த முடியவில்லை என்ற தகவல்களும் புதுடெல்லிக்கு வந்த வண்ணம் இருக்கிறது.

இந்த நிலையில் இந்திய அரசு ஒரு தீர்மானமான முடிவை இன்னும் இரண்டொரு நாட்களில் மேற்கொள்ளவிருக்கிறது.

சென்னை அண்ணாசாலையில் உள்ள அறிஞர் அண்ணாவின் திருவுருவச் சிலைக்கு செல்வி ஜெயலலிதா மாலை அணிவித்தார். ஆயிரக்கணக்கில் திரண்டு வந்த மக்களுக்கு அவர் வணக்கம் செலுத்தும் காட்சி.

## அங்கமுத்து இல்லத் திருமணம்: ஜெயலலிதா வாழ்த்து

சென்னை, செப். 16— சென்னை மாவட்டக்கழக அவைத்தலைவரும்மேலவை உறுப்பினருமான பா. அங்கமுத்துவின் புதல்வி கலாவதிக்கும் குழந்தை சுப்பிரமணியத்தின் புதல்வன் மகாலிங்கத்திற்கும் தொழிலாளர் நல அமைச்சர் கே. ஏ. கே. தலைமையில் சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது.

கழக கொள்கை பரப்புச் செயலாளர் செல்வி ஜெயலலிதா அங்கமுத்துவின் இல்லத்திற்கு சென்று மணமக்களை வாழ்த்தி வெள்ளிக் குத்துவிளக்கு பரிசளித்தார். அங்கமுத்துவின் பேத்தி உத்திரா கிருஷ்ணமூர்த்தியின் குழந்தைக்கு மலர்கொடி என்று ஜெயலலிதா பெயர் சூட்டினார்.

கொள்கை பரப்பு செயலாளர் செல்வி ஜெயலலிதாவுக்கு அமைச்சர் கோமதிசீனிவாசனும், சட்டமன்ற உறுப்பினர் சரோஜாவும் வாழத்து தெரிவித்தனா.

## அங்கமுத்து இல்லத் திருமணம்: ஆர் எம் வீ வாழ்த்து

சென்னை, செப். 16— சென்னை மாவட்டக்கழக அவைத்தலைவரும்மேலவை உறுப்பினருமான பா. அங்கமுத்துவின் புதல்வி கலாவதிக்கும், குழந்தை சுப்பிரமணியத்தின் புதல்வன் மகாலிங்கத்திற்கும் தொழிலாளர் நலத்துறைஅமைச்சர் கே.ஏ.கே. தலைமையில் நேற்று சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது.

சுற்றுலா, அறநிலையத் துறை அமைச்சர் ஆர். எம். வீ. நேற்று மாலை அங்கமுத்துவின் இல்லத்திற்கு வந்து மணமக்களை வாழ்த்தி பரிசளித்தார்.

## தேசிய விளையாட்டு போட்டி: 200 தமிழ் வீரர்கள் பங்கேற்பு

### சிவந்திஆதித்தன் அறிவிப்பு

சென்னை, செப். 16— புதுடெல்லியில் நடக்கும் தேசிய விளையாட்டுப் போட்டியில் பங்குபெற 200 வீரர்கள் தமிழ் நாட்டிலிருந்து செல்கிறார்கள் என்று சிவந்தி ஆதித்தன் தெரிவித்தார்.

தமிழ்நாடு ஒலிம்பிக் சங்கத்தின் வருடாந்திர பொதுக்குழு கூட்டம் சென்னையில் நடைபெற்றது. இந்தக் கூட்டமுடிவில் சங்கத்தலைவர் சிவந்தி ஆதித்தன் நிருபர்களிடம் கூறியதாவது:-

தேசிய விளையாட்டுப் போட்டி புதுடெல்லியில் வரும் 9ந் தேதியிலிருந்து 26ந்தேதி வரை நடக்கிறது இந்தப் போட்டியில் ஏறத்தாழ 200 வீரர்கள் தமிழ் நாட்டிலிருந்து கலந்து கொள்கிறார்கள். இந்தவீரர்கள் போட்டியில் கலந்து கொள்வதற்கான ஏற்பாடுகளை தமிழ்நாடு ஒலிம்பிக் சங்கம் செய்து வருகிறது.

ஓட்டப்பந்தயம், உயரம் தாண்டுதல் போன்ற விளையாட்டு போட்டிகளில் கலந்து கொள்வதற்காக 43 பேர்களும், கூடைப்பந்து பெண்கள் போட்டிக்காக 14 பேர்களும், குத்துச் சண்டை போட்டிக்காக 14 பேர்களும், சைக்கிள் போட்டிக்காக 18பேர்களும் துப்பாக்கி சுடும் போட்டிக்காக 21பேர்களும், கைப்பந்து போட்டி பெண்கள் அணிக்காக 14 பேர்களும், பளுதூக்கும் போட்டிக்காக 15 பேர்களும், நீச்சல் போட்டிக்காக 32 பேர்களும் அந்தந்த விளையாட்டு சங்கங்களின் சார்பில் தங்கள் பெயர்களை ஒலிம்பிக் சங்கத்தில் பதிவு செய்துள்ளனர்.

பூப்பந்தாட்டம், படகு போட்டி, டேபிள் டென்னிஸ், கபடி போன்ற விளையாட்டுகளுக்காக இன்னும் பெயர்கள் கொடுக்கப்படவில்லை.

### பயிற்சி முகாம்

இந்த போட்டிக்கு முன்பு தமிழ்நாடு ஒலிம்பிக் சங்க சார்பில், இந்த விளையாட்டு வீரர்களுக்கான பயிற்சி முகாம்கள் சென்னையில் நடக்கும்.

இந்தக் கூட்டத்தில் தமிழ் நாடு டேபிள் டென்னிஸ் சங்கம், தமிழ்நாடு ஜூடோ சங்கம் ஆகிய சங்கங்களுக்கு தமிழ்நாடு ஒலிம்பிக் சங்கம் அங்கீகாரமளித்துள்ளது.

இவ்வாறு சிவந்தி ஆதித்தன் பேசினார்.

## பல்லவன் பஸ் கடத்தல்

சென்னை, செப் 16— இன்று காலை 4 மணி அளவில் பல்லவன் பஸ் ஒன்று கடத்தி செல்லப்பட்டது.

டிரைவர்களையும் கண்டக்டர்களையும் அழைத்துச் செல்லும் லிப்ட் பஸ் (TMM 8881) ஒன்றை சின்னமலை பஸ் ஸ்டாப்பில் நிறுத்தி விட்டு வண்டியின் டிரைவர் டீ சாப்பிட சென்றபோது பஸ்ஸை இருதயதாஸ் என்பவர் கடத்தி சென்று விட்டார். டிரைவர் கிண்டி காவல் நிலையத்தில் புகார் செய்தார்.

கடத்திச் செல்லப்பட்ட பஸ்சைதை சுன்னிகாபுரம்தில் இருந்தது அதை போலீசார் கண்டுபிடித்தார்கள். பஸ்ஸுக்குள் இருதயதாஸ் படுத்திருந்தார். அவரைப் போலீசார் கைது செய்தார்கள். கைது செய்யப்பட்ட இருதயதாஸ் தனியார் பஸ் கம்பெனியிலிருந்து வேலை நீக்கம் செய்யப்பட்டவர்.

## சென்னையில் அண்ணா விழா நிகழ்ச்சிகள்

சென்னை, செப் 16— பேரறிஞர் பெருந்தகை அண்ணாவின் 77-வது பிறந்தநாள் நேற்று சென்னையில் பல இடங்களில் கழகத் தோழர்களால் கொண்டாடப் பட்டது.

### 57-வது வட்டம்

57-வது வட்டம் எம். ஜி. ஆர். மன்றம் சார்பாக உப்பளத்தில் நேற்று காலை 10-மணி அளவில், சுப்பிரமணி தலைமையில் அண்ணா பிறந்த நாள் விழா கொண்டாடப்பட்டது. வட்ட செயலாளர் சி. ஜி. இராதா கிருஷ்ணன் கொடியேற்றினார். அண்ணா படத்தை எம். வி. ராமன் திறந்து வைத்தார். தொகுதி அவைத் தலைவர் மண்ணடி கிருஷ்ணமூர்த்தி ஏழைகளுக்கு உணவுவழங்கினார். மற்றும் எட்டி, பாஸ்கர், கு. கஜேந்திரபாபு, கே. எல்லப்பன், என். ஏ. துரை, எம். எஸ். மணி, எல். குமார் ஆகியோர் கலந்து கொண்டனர்.

### 46வது வட்டம்

துறைமுக பகுதி 46வது வட்ட கொண்டித்தோப்பு எம்.ஜி.ஆர். மன்றத்தின் சார்பாக அண்ணா பிறந்த நாள் விழா கொண்டாடப்பட்டது. விழாவிற்கு எஸ். சம்பத் தலைமை தாங்கினார். தொகுதி செயலாளர் எம்.வி. இராமன் கொடியேற்றி வைத்துப்பேசினார் அண்ணா படத்தை தொகுதி தலைவர் மண்ணடி கிருஷ்ணமூர்த்தி திறந்துவைத்தார்.

இந்த நிகழ்ச்சியில் சி.ஜி. இராதா கிருஷ்ணன் எம் பி ஆனந்தன், சுவாமிநாதன் முத்து, பாஸ்கர் ஆகியோர் கலந்துகொண்டு பேசினார்கள்

### ஆலந்தூர்

நேற்று ஆலந்தூர் நகரக் கழகத்தின் சார்பில் பேரறிஞர் அண்ணா அவர்களின் 77ம் பிறந்த நாளை முன்னிட்டு ஆலந்தூர் நகரக் கழகத் தலைவர் சந்தனவசலம் தலைமையில் கழக நாட்டாண்மை குழுத் தலைவர் மோகனரங்கம் கழக கொடியேற்றி வைத்தார்.

ஆலந்தூர் பகுதி அண்ணா சிலைக்கு மாலை அணிவித்தார். சொக்கலிங்கம் இனிப்பு வழங்கினார். ஆலந்தூர் மோகன் வரவேற்று பேசினார் ரவீந்திரன் நன்றி கூறினார்.

காலை 9.30 மணிக்கு ஆலந்தூர் 1வதுவட்ட கிளையின் சார்பில் அண்ணா பிறந்த நாள் விழா கொண்டாடப் பட்டது.

மோகனரங்கம்கழககொடியேற்றினார் நிகழ்ச்சிக்கு நகர பொருளாளர் சுகுமார் தலைமையேற்றார். மேற்படி இரண்டு நிகழ்ச்சியிலும் லெனின் (நகர செயலாளர்) சீனிவாசன் இராஜேஸ்வரி மோகன், ரவீந்திரன். மு. ராமதாஸ் சொக்கலிங்கம் ந. காசிநாதன் கிருஷ்ணன் மகளிர் அணித்தோழியர்கள் லக்ஷ்மி மல்லிகா லூயிஸ்மேரி ராணி ரகமத்பிலி உல்லாஸ் மற்றும் துரைராஜ் சீனிவாசன் செல்வி லப்பா உள்ளிட்ட பலர் பங்கேற்றனர்.

## செல்வி ஜெயலலிதா-ஜெர்மன் தூதர் சந்திப்பு

சென்னை, செப். 16— ஜெர்மன் கூட்டாட்சிக் குடியரசின் இணைத் தூதர் (கான்சல் ஜெனரல்) என். மெர்ட்டன், கழக கொள்கை பரப்புச் செயலாளர் செல்வி ஜெயலலிதா எம்.பி.யை சந்தித்துப் பேசினார். மரியாதைக்கான சந்திப்பு இது

செல்வி ஜெயலலிதாவுக்கு ஜெர்மன் நாடு பற்றிய புத்தகம் ஒன்றை தூதர் வழங்கினார்.

## மாஸ்கோ வெப்பநிலை அதிகரிக்கிறது

மாஸ்கோ, செப். 16— மாஸ்கோ நகரின் வெப்பநிலை அதிகரித்திருப்பதாக மாஸ்கோ பல்கலைக் கழகம் நடத்திய ஆராய்ச்சிகளிலிருந்து தெரிகிறது.

பனிக் காலத்திலும் இளவேனிற் காலத்திலும் இது நன்றாகத் தெரிகிறது. சென்ற 10 ஆண்டுகளில் இந்த வெப்ப நிலை முறையே வழக்கத்தைவிட 2.1 டிகிரி செண்டிகிரேடும், 2.2 டிகிரி செண்டிகிரேடும் அதிகத்துள்ளது.

இலையுதிர்காலத்தில் 0.8 டிகிரிதான் அதிகரிக்கிறது. கோடை காலத்தில்தான் சராசரி வெப்பநிலை இதற்கு முந்தின பதினான்கு ஆண்டுகளைவிட குறைந்து உள்ளது.

சோவியத் யூனியனின் ஐரோப்பிய பகுதியில் ஏற்படும் இயற்கைமாற்றங்களே இந்த வெப்ப உயர்வுக்கு காரணம் என்று விஞ்ஞானிகள் கருதுகின்றனர்.

நகரங்களின் வளர்ச்சியால் வெப்ப நிலை உயர்வது மிகவும் குறைவென்று அவர்கள் கூறுகின்றனர்.

## இந்திரா பெயரில் போக்குவரத்து கழகம்: முதல்வர் உத்தரவு

திண்டுக்கல், செப். 16— புதிய போக்குவரத்துக் கழகத்துக்கு அன்னை இந்திரா பெயரை வைக்க முதல்வர் புரட்சித் தலைவர் உத்தரவிட்டார் என்று அமைச்சர் முத்துசாமி கூறினார்

புதிதாக அமைந்துள்ள அண்ணா மாவட்டத்தில் அன்னை இந்திரா போக்குவரத்துக் கழகம் என்ற பெயரில் புதிய போக்குவரத்துக் கழகம் அமைக்க விழா மேடையில் புரட்சித் தலைவர் ஆணை பிறப்பித்தார்.

போக்குவரத்து துறை அமைச்சர் முத்துசாமி புதிய போக்குவரத்து கழக விவரங்களை விளக்கினார்.

அவர் கூறியதாவது:-

மதுரை மாவட்டம் இரண்டாகப் பிரிக்கப்படுவதால் அண்ணா மாவட்டத்துக்கு தனியாக ஒரு போக்குவரத்து கழகத்தை அமைக்கும்படி முதல்வர் புரட்சித்தலைவர் உத்தரவிட்டார் அதன்படி கோப்புகள் உருவாக்கப்பட்டன புதிய போக்குவரத்துக் கழகம் 1.4.86 முதல் செயல்படும். இதற்கான பெயர் வைப்பது என்பதை மேடையிலேயே சொல்வதாக தெரிவித்திருந்தார்

இங்கே அந்த கோப்புகளை வாங்கி கையெழுத்திட்டார்

அன்னை இந்திரா போக்குவரத்துக் கழகம் என்று பெயர் சூட்டி இருக்கிறது அன்னை இந்திராவின் பெயரை வைக்க மத்திய அரசிடம் அனுமதி கேட்க வேண்டும். முறைப்படி அது கேட்டு பெறப்படும். அது வரை யூனிட் 2 என்ற பெயரால் அழைக்கப்படும்,

இவ்வாறு அமைச்சர் முத்துசாமி கூறினார்.

## தமிழகத்தில் தோல் அட்டை தொழிற்சாலை

சென்னை, செப் 16— ஜெர்மனியில் பல்வேறு நாடுகளில் கூட்டுத்துறையில் பல்வேறு தொழிற்சாலைகள் அமைத்துள்ள கிர்ச்பெல்டு நிறுவனத்துடன் தமிழகத்தில் தோல்அட்டைகள் தயாரிக்கும்தொழிற்சாலை அமைப்பது குறித்து டால்கோ தலைவர் என். குலசேகர பாண்டியன் பேச்சு வார்த்தை நடத்தினார். இந்த பேச்சு வார்த்தை மேற்கு ஜெர்மனியில் உள்ள டூஸல்டார்ப் நகரில் கிர்ச்பெல்டு நிறுவனத்தின் தலைமை அலுவலகத்தில் நடைபெற்றது. பேச்சுவார்த்தையில் அந்த நிறுவன அதிகாரிகள் கலந்துகொண்டனர். பேச்சுவார்த்தை பயனுள்ளதாகவும், நல்லமுறையில் நடைபெற்றதாகவும் டால்கோ தலைவர் என் குலசேகரபாண்டியன் அறிவித்துள்ளார். தற்பொழுது நடைபெற்ற பேச்சு வார்த்தையின்படி அந்த நிறுவனத்தினர் அக்டோபர் இறுதியில் தமிழகப் வருகிறார்கள். முதல்வர் புரட்சித்தலைவர் ஒப்புதல் பெற்றபின்பு இந்த திட்டத்தை நிறைவேற்ற டால்கோ நிறுவனம் பணிகளை துவக்கும்.

பேரறிஞர் அண்ணா பிறந்த நாளை யொட்டி சென்னையிலுள்ள சிறைக்கைதிகளுக்கு அமைச்சர் பொன்னையன் பிரியாணி வழங்கினார்



திண்டுக்கல்லில் அண்ணாவின் வாழ்க்கை வரலாற்றுக் கண்காட்சியை துணை சபாநாயகா வி.பி. பாலசுப்பிரமணியம் திறந்துவைத்தார். படத்தில் நிதியமைச்சர் நாவலரும், அமைச்சர் ப. உ. ச,வும் உள்ளனர்.

# அண்ணா கொள்கையை வாழவைக்கும் முதல்வர் புரட்சித் தலைவர்

## அமைச்சர் காளிமுத்து பேச்சு

திண்டுக்கல், செப். 16- அண்ணாவின் கொள்கையை வாழவைப்பவர் முதல்வர் புரட்சித் தலைவர் என்று அமைச்சர் காளிமுத்து கூறினார்.

முதல்வர் புரட்சித் தலைவருக்கு அண்ணா விருது வழங்குவதை எதிர்ப்பதா என்று அமைச்சர் காளிமுத்து கண்டனம் தெரிவித்துள்ளார்.

அண்ணா மாவட்ட தொடக்கவிழாவையொட்டி திண்டுக்கல்லில் கவியரங்கு நடைபெற்றது. இதில அமைச்சர்காளிமுத்துகலந்து கொண்டு பேசினார்.

அப்போது அவர் கூறியதாவது:-

பேரறிஞர் அண்ணா அவர்களின் பிறந்த நாள் விழாவையும், அண்ணா மாவட்ட தொடக்க விழாவையும் சேர்த்து இரட்டை விழாவாக இங்கே நடத்திக் கொண்டிருக்கிறோம்.

தாய் மாவட்டமான மதுரை மாவட்ட சட்ட மன்ற உறுப்பினர் என்ற முறையில் எனது வாழ்த்துக்களைத்தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வளவு காலமும் எங்களோடு இணைந்து இருந்த திண்டுக்கல் பிரிகிறதே என்ற ஏக்கம் இருந்தாலும் மகளைமணமுடித்து கொடுத்து கணவன் வீட்டுக்கு அனுப்பும் மகிழ்ச்சியோடு அண்ணா மாவட்டத்திற்கு வாழ்த்துக்களை தெரிவித்துக் கொள்கிறேன்.

தேவாரத்தில் அண்ணாவைப்பற்றி குறிப்பிடப்பட்டுள்ளது, அப்பர் 4 முறையும் சம்பந்தர் 3 முறையும் சுந்தரர் 5 முறையும், மாணிக்கவாசகர் 4 முறையும் அண்ணா என்று இறைவனை குறிப்பிடுகிறார்கள்.

தமிழ்திருநாட்டை வாழவைக்க அண்ணா வருவார் என்று கருதி அப்போதே அவர்கள் பாடி இருக்க வேண்டும் என்று கருதுகிறேன்.

பேரறிஞர் அண்ணாவின் கருத்துகள் விட்டுபோகாமல் கட்டிக்காத்து வரக்கூடிய மெய்யான சீடர் புரட்சித் தலைவர் எம். ஜி. ஆர். அவருக்கு அண்ணா விருது வழங்கபபட இருக்கிறது. புரட்சித் தலைவருக்கு அண்ணா விருது வழங்கலாமா என்று கசப்பு உணர்ச்சி கொண்டவர்கள் கேட்கிறார்கள்.

அண்ணாவின் திருப்பெயரால் ஒரு இயக்கத்தை ஏற்படுத்தி அவர் திரு உருவத்தை கொடியில் பொறித்தாரதற்காக அண்ணாவின் கொள்கைக்கு "அண்ணாயிசம்" என்றுபெயர் வைத்தார அதற்காக அண்ணா பெயரால் மாவட்டம் கண்டார அதற்காக புரட்சித் தலைவருக்கு 10 15 அண்ணா விருதுகள் வழங்கப்பட வேண்டும். அண்ணாவின்பெயரை,கொள்கையை புரட்சித்தலைவர் நிலைக்க வைக்கிறார்.

இவ்வாறு அமைச்சர் காளிமுத்து பேசினார்.

## சுலோசனாசம்பத் வானொலியில் பேசுகிறார்

சென்னை, செப் 16 — தமிழ்நாடு தொழில் வளர்ச்சி நிறுவன தலைவர் சுலோசனா சம்பத் நாளை 17ந் தேதி பிற்பகல் ஒரு மணிக்கு சிந்தனைச் செம்மல்கள் என்ற தலைப்பில் சென்னை வானொலியில் பேசுகிறார்.



திண்டுக்கல்லில் பேரறிஞர் அண்ணா சிலையை புரட்சித் தலைவர் திறந்து வைத்தார்.

## அண்ணா மாவட்ட விழா சிறப்பு படங்கள்



முதல்வர் புரட்சித்தலைவருக்கு ஒரு தாய் திருஷ்டி சுற்றுகிறார். அருகில் முதல்வரின் துணைவியார் ஜானகி அம்மையார் மற்றும் ஜேப்பியார் எம். எல். சி, சேடப்பட்டி முத்தையா ஆகியோர்.

### விஜயலட்சுமி இல்லத் திருமணம் ஆளுநர் நேரில் வந்து வாழ்த்து

# ஜெயலலிதா தலைமையில் சிறப்புமிகு திருமண விழா

சென்னை, செப். 16— செல்வி சாந்தாவிற்கும் மல் கதர் வாரியத்துறை அமைச்சர் விஜயலட்சுமி பழனிச்சாமியின் சகோதரியின் புதல்வர் குணசேகரனுக்கும் சென்னை ஊர் வேங்காம்பட்டி மறைந்த பொன்னுசாமி கலைவாணர் அரங்கில் சிறப்பாகத் திருமணவிழா நடைபெற்றது.



அண்ணா மாவட்ட துவக்கவிழாவில் பங்கேற்க மதுரைவந்த புரட்சித் தலைவரை மாவட்ட ஆட்சித் தலைவா வரதராஜுலு மாலை அணிவித்து வரவேற்றார், படத்தில் அமைச்சாகள் ப. உ. ச., சாத்தூா ராமச்சந்திரன் ஆகியோா உள்ளனர்.



அண்ணா மாவட்ட துவக்க விழாவிற்கு தலைமை ஏற்ற அமைச்சா ப.உ.ச.வுக்கு மதுரை மாவட்ட ஆட்சித் தலைவா வரதராஜுலு தஞ்சை கலைத்தட்டு பரிசு வழங்கினாா.



அமைச்சர் விஜயலட்சுமியின் தங்கை சாந்தாவுக்கும் குணசேகரனுக்கும் திருமணம் நடைபெற்றது கழக கொள்கைபரப்பு செயலாளா செல்வி ஜெயலலிதா மணமகன் கையில் மங்கல நாணை எடுத்து தரும் காட்சி.

மணவிழாவிற்கு கழகக் கொள்கைபரப்புச் செயலாளர் செல்வி ஜெயலலிதா தலைமை வகித்தார்.

மணமக்களை வாழ்த்தி தமிழக கவர்னர் குரானா உயர்நீதிமன்ற நீதிபதி நடராசன், அமைச்சர்கள் ஆனூர் ஜெகதீசன், கோவேந்தன், காமதி சீனிவாசன், யூசுப், தமிழக அரசு சிறப்புப் பிரதிநிதி ஜி.ஆர்.எட்மண்ட், திட்டக் குழுத் துணைத் தலைவர் பாவலர் முத்துசாமி, அண்ணா தொழிற்சங்க பேரவைப் பொதுச் செயலாளர் வை. பெருமாள், கழக மாணவர் அணிச் செயலாளர் லியாகத் அலிகான், சேலம் மாவட்டக் கழகச் செயலாளர் கண்ணன் எம். பி ஆகியோர் பேசினர்.

### செங்குட்டுவன் வரவேற்பு

ஆரம்பத்தில் விழாவுக்கு வருகைதந்தவர்களைகழகத்தின் சார்பாக தலைமைக் கழகச் செயலாளர் கோ செங்குட்டுவன் மணமக்கள் வீட்டார் சார்பாக பழனி சாமிஆகியோர்வரவேற்றுப் பேசினர். விழா இறுதியில் விஜயலட்சுமி பழனிச்சாமி நன்றி கூறினார்.

விழாவுக்குத் தலைமை வகித்து செல்வி ஜெயலலிதா எம். பி. பேசுகையில் குறிப்பிட்டதாவது:—

நமது இதயதெய்வம் புரட்சித் தலைவர்அவர்கள் இந்த மணவிழாவினை நடத்தி வைப்பதாக இருந்தது. அறிஞர் அண்ணா அவர்களின் திருநாமம் தாங்கிய மாவட்டத்தினை திண்டுக்கல்லில் புரட்சித் தலைவர் அவர்கள் துவக்கி வைத்த விழா விபரங்களை அறிந்திருப்பீர்கள்.

மணமக்களை வாழ்த்தி விட்டு செல்வதற்காகத் தான் நான் வந்தேன்.

### கழகத் திருமணம்

இந்தத் திருமணம் சேலம் மாவட்டத் திருமணம் என்று அண்ணன் பாவலர் முத்துசாமி அவர்கள் குறிப்பிட்டார்கள். உண்மைதான், மணமக்கள் அந்த மாவட்டத்தைச் சார்ந்தவர்கள் தான்.

இந்தத் திருமணம் சேலம் மாவட்டத் திருமணம் என்பதைக் காட்டிலும் அனைத்திந்திய அண்ணா தி.மு. கழகத்தின் திருமணம் என்று குறிப்பிடுவது இன்னும் பொருத்தமாக இருக்கும் என்பதுஎனது தாழ்மையான கருத்தாகும்.

சகோதரி விஜயலட்சுமியின் குடும்பம் கழகத்திற்காகச் செய்துள்ளசேவையை மகத்தான தியாகத்தை எவர்தான் மறக்கமுடியும்? புரட்சித்தலைவர் அவர்கள் அவருடைய தியாகத்திற்கு மதிப்பளிப்பவர்கள். எனவேதான் சகோதரி விஜயலட்சுமி மாண்புமிகு விஜயலட்சுமியாக இருக்கிறார்.

Edited and Published by K. RAVINDRAN on behalf of Thangamani Publications and Printed by All India AnnaD.M.K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road MADRAS-600029



பேரறிஞர் அண்ணா சிலைக்கு முதல்வர் புரட்சித் தலைவர் மாலை அணிவித்தபோது எடுத்தபடம்.



புரட்சித்தலைவரைக் காண வந்த மக்கள் பெருங்கடலின் ஒரு பகுதி



அண்ணா மாவட்ட துவக்க விழாவில் பங்கேற்ற கழகத்தோழர்களின் எழுச்சிக் கோலம்